என் பஞ்சை மனத்திலும் ஒளியுண்டாயிற்று. "ஆம்; யுகாந்திர காலமாக, பெண்ணினம் தங்கள் கற்பு நெறியைத் தான், பெண்மை நலனைத்தான் பேணி வந்திருக்கிறார்கள். இந்தப் புண்ணிய பூமியின் தாய்மார்கள் பெண்மையை இத்தனை நாள் போற்றி வந்ததனால்தான் இன்று இவ்வுலகமே நிலைத்து நிற்கிறது. யுகாந்திர காலமாகக் காக்கப்பட்டு வந்த பெண்மையின் தியாகச் சரித்திரத்தை இந்தப் பாவியின் காதலுக்காக மாசுபடுத்துவதா? முடியாது!"

குழைந்து சாய்ந்த என் மனக்கொடி மீண்டும் நிமிர்ந்தது.

சந்துரு கேட்டார் : "ரஞ்சி, வரவில்லையா?"

"ஆம்" என்றேன், முரட்டுத் துணிவோடு. சந்துருவின் உடல் நடுங்கியது.

"என்ன, பைத்தியம் பிடித்துவிட்டதா?"

"அதெல்லாமில்லை. என்னுடைய காதலுக்காக, பெண்மையைக் களங்கம் செய்யமாட்டேன். யுகாந்திர காலமாகக் காப்பாற்றப்பட்டு வந்த திரவியம், இந்தப் பாவியால் கொள்ளை போகவேண்டாம்"

"அப்போது நீ வரமாட்டாயா?" அவர் குரல் நடுங்கியது.

"ஆம், வர முடியாது. முடியவே முடியாது!" என் தொண்டையில் இரும்புக் குண்டை வைத்து அடைப்பது போல இருந்தது.

"உனது அன்பின்மேல் நம்பிக்கை வைத்ததற்கு, இது தானா உனது கடைசி வார்த்தை?"

"ஆமாம்."

"அப்படியானால், உனது அன்பு?"

"செத்து விட்டது என்று வைத்துக்கொள்ளுங்கள்."

அதற்குமேல் என்னுடைய உணர்ச்சிகளைத் தாங்க முடியவில்லை. அப்படியே விக்கி விக்கி யழுதேன், பாவமன்னிப்புக் கோரும் கொலையாளியைப்போல.

சிறிது நேரங் கழித்து, கண்களைத் துடைத்துக் கொண்டு, தலை நிமிர்ந்தேன். சந்துருவைக் காணவில்லை. மேஜைமீது அவர் பொருத்திப் பொருத்திப் பார்த்த, அந்த வளையல் துண்டுகள், தாறுமாறாய்க் கிடந்தன. என்ன முயன்றாலும் உடைந்த வளையல் துண்டுகளை ஒன்று சேர்க்க முடியுமா?

என் மனத்தில் வெற்றிக் களி தாண்டவமாடியது. சஞ்சலத்தால், என் மனத்தில் பின்னப்பட்ட கருந்திரை கிழிபடப் போவதுபோலத் தெரிந்தது.

அறையை விட்டு வெளியே வந்து மாடி வராந்தாவில் நின்றேன். மனத்தில் சாந்தியும் இல்லை, சலனமும் இல்லை; புயல் ஓய்ந்த கடல் அமைதியைப்போல மனமிருந்தது.

வராந்தாவில், வானிலேறிய வெண்ணிலவின் பால் ஒளி அமிர்த மழை பொழிந்து கொண்டிருந்தது.

சந்திரனின் ராஜநடையிலே மனத்தை லயிக்கவிட்டு அண்ணாந்து நிமிர்ந்தேன்.

வானத்தில் வெள்ளிப் படகுபோல, சுக்லபக்ஷத்துப் பிறை மிதந்து சென்று கொண்டிருந்தது. படகைச் சுற்றி வைடூரிய மணிகளைப்போல, மினுங்கிக்கொண்டிருந்தன தாரகைகள். சந்திரனை மூழ்கடித்து, மறைத்திருந்த கருமேகம் விலகி வெகு விரைவாகச் சென்று கொண்டிருந்தது.

தியாகச் செம்மை துலங்கும் என் மனம், பெருமிதத்தால், வானலோகம் வரையிலும் நிமிர்ந்து நின்றது.

"அதோ சிதறிக் கிடக்கின்றனவே, தாரகை மணிகள்— அவற்றில் அந்தக் கற்புக்கரசி அருந்ததி எங்கு இருக்கிறாளோ? ஆம், கற்புக் கனல்களெல்லாம் உலகத்துச் சூழ்நிலைக்குள்ளும், அதற்கு அப்பாலும் நின்று ஒளிவீசுகிறார்கள். சீதைக்குக் காவிய மாளிகை கட்டிக் கொலு அமர்த்தினான் கம்பன்; கண்ணகிக்குக் கோயில் கட்டிக் கைதொழுதான் சேரன்; அருந்ததிக்கு வானிலே இடங்கொடுத்தான் ஈசன். ஆம், இன்றைய என்னுடைய வெற்றி மகத்தானதுதான். கற்பு மகளிரின் தோளோடு தோள் நிற்கும் பாக்கியம் அல்லவா நான் பெறவேண்டும்? அருந்ததியைப்போல, இந்த உலகின் அந்தகாரத்தில் நானுமல்லவா ஒளிவிட வேண்டும்!"

ஜில்லென்ற ஒரு உணர்ச்சி, என் தோள்பட்டையில் குளிர்ந்து ஓடியது. திரும்பினேன்; என் கணவர் நின்று கொண்டிருந்தார். என் மலர்ந்த புன்னகை அவரை வரவேற்றது.

"ரஞ்சி! வானிலே என்ன அவ்வளவு லயிப்பு? வான சாஸ்திரம் பயில்கிறாயா?" என்றார் கணவர்.

"ஆமாம்" என்றேன் நான்.



